ஓம்

தத். ஸத்.

தேவாரநகரம்

சுத்த அத்வைதி அருட்கவி

ஸ்ரீ விலக்ஷணாநந்தஸ்வாமிகள்

அருளிச்செய்த

# பிரஹ்மானுபவம்

அமரர் கி. அருணாசல முதலியார்
அவர்களின் நினைவாக அன்பளிப்பு.
அளிப்பவர்:
திருமதி சியாமளா அருணாசலம்
(1982) இஃது சீர்காழி.

திண்டுக்கல்

சுப்பாநாயக்கர் அவர்களால்

திருச்சினாப்பள்ளி
ஜெகம் அண்டு கோ, டாட்ஸன் பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றது.
1919

ஓம்.

தத். ஸத்.

# பிரஹ்மானுபவம்.

---

1. உலகமுமுலகினுள்ள வுண்மையுமுலகமற்ற
பலகலைநூலும்பண்பும் பண்டிதமுறையுந்தீமை
யலமறுமவத்தைமுத்தி யாகிடும்பந்தமியாவுஞ்
சலமுறுமனதுளேநான் சகசமாய்க்கண்டேனின்றே

2. அனைத்தினுமிச்சையின்றி யாத்திரமின்றிநின்ற
மனித்தரேபிர்மநிட்டைக் குரியவர்மகிழ்தலின்றி
வினைத்துயரின்றிநிற்க வேண்டுவதொன்றுமின்றி
மனைத்துறுமார்க்கங்கொண்டுமென்னுதல்வேண்டுமோதே

3. பாகியவிச்சையுள்ள பாபிகட்கில்லைஞான
மேகியமனதையெங்கு மின்றியேயென்னதாக்கிப்
பாகியமற்றுநின்ற பரமமேபதியதாகத்
தாகியங்கொண்டுநிற்குந் தன்மையேதனித்ததாமே

4. வெளிமுகங்கொண்டுநிற்கும் வீணரைப்பற்றதாக
வெளிகடந்தங்குநிற்கும் வேதரைவிரும்பவேண்டு
மளிபலதேடும்போல் வகத்தினாலறிவைத்தேடிக்
களிகொளவேண்டுமென்று கருதினேன்கருத்தினாலே

5. சோத்திரவின்பங்காணாத் துரியமேநிருவிகற்ப
மாத்தியமென்றுமுன்னோ ரறைந்தனரறிந்திலாயோ
கூத்தியைப்போலக்கூடிக் குதிப்பதுமறிவிலாத
வாத்திமத்தன்மையென்று வருவதுவழக்கமாதோ

6. பற்பலவழிகளாலே பரமனைப்பார்ப்பரென்று
விற்பனருரைத்தநீதி வேதமேயென்றுமெண்ணிக்
கற்பதுகடனுமென்றன் கருத்திலையென்றதாலு
முற்பவமொழியவிச்சை முடிந்ததுமுத்திதானே

7. வேதநூற்காணவிண்ணே விழுமியபொருளேயுன்னை
யேதினாலுணரலாகு மென்றெனையிழுக்குமாந்தர்
வாதினாற்கேட்டதற்கு வழியிலைவாரமென்றே
யோதுறுமுனையேகாணவுலுத்தரென்றெண்ணினேனே

8. ஒன்றிலும்பற்றிலாம லோரிடமிருப்பிலாம
லின்றெனுமகமிலாம லிருப்பதுமில்லாதாகி
நன்றிதுதீதென்றெண்ணு நாட்டமுமின்றிநாளு
மென்றறிவொன்றேயென்று மிருப்பதுஞானிகட்கே

9. ஆகமமுழுதுந்தேர்ந்து மறிவினையறிந்தாரில்லை
யேகமாமவத்தையாக்கி யெங்குமாய்நின்றதன்னை
யூகமோடுணர்ந்துமுண்மை யுற்றவரடியேதாழ்ந்தும்
பாகமாங்காலந்தன்னிற் பரநிலையடைதல்வேண்டும்

10. தாமதஞ்சலையின்றிச் சத்துவமொன்றதாக
வாமிதேயெந்தநாளி ஞருகுமோவயனினன்னே
நாமிதுவதுவென்றெண்ணு நாட்டமுமுறியநாட்டிச்
சேமமேசெய்துமிக்கச் சேரிடஞ்சேர்ப்பிப்பாயே

11. எங்குமாஞானம்வந்தா லிலையதுவுலகமில்லை
யங்கெலாமரனேயாகு மென்றனனதுவுமில்லை
யிங்கிலைநானுமில்லை யென்றதாலீசனில்லை
நங்குருநாட்டமின்றி நாட்டுவனயனத்தாலே

12. உலகமேயுலகமென்று முணர்ந்தனனொருநர்டன்னி
னிலையெனவுணர்ந்தேனிப்பா லிலையெனிலில்லையாமோ
நலமலிநாட்டமத்தா னாட்டினருலகநாட்ட
மலமதுவாகுமென்று மதித்தனன்மனத்தினாலே

13. சீதரன்முகுந்தன்செல்வன் ஸ்ரீபதிசேகரன்றா
னாதரவென்றுபோற்றி யடியிணைபணிந்துநீற்றிப்
பாதமேபற்றிநின்ற பற்றையுமறந்துமத்தா
லோதொணாவுலகந்தன்னி லுயருவதென்றனாலோ

14. சோதனஞ்செய்துநின்ற சோதியேதுரியநிட்டை
யேதினுமியாரினாலு மேற்பதுமில்லையந்தக்
காதையே கண்டுநானுங் கத்துருவகத்தைத்தள்ளிப்
பாதையிற்பதியைக்காணப் பக்குவமிருப்பதாமே

15. நிட்டையிலிருக்கவென்றா னினைப்பிலாநீக்கியந்த
நிட்டையிலிருக்கவேண்டு நின்மலநிட்டைதன்னி
லெட்டுவதில்லைமிக்க வியலறிவதனையெண்ணா
நிட்டையேசாதித்தந்த நிலமுறவேண்டுமென்றே

16. சகமயலனைத்துந்தீர்ந்துஞ் சாத்திரக்குழைக்கையூடு
மிகவுமேயென்னைக்காட்டி மீட்டிடலாகாமிக்க
வகமுனதடிமையின்றி யாகுமோவடியேனுக்கு
மகமதியருளிச்செய்து மாற்றுவமாற்றவேண்டும்

17. சதுர்விதவேதசாரஞ் சத்தினிபாதமாக
மதிநினைவற்றுமான யோகமுமதித்துநோக்கிப்
பதியிடைநின்றுநாளும் பாகமாய்நின்றநாயேன்
மதுரையினம்மைமீனாள் மலரடிமதித்துய்வாமே

18. அந்தணரில்லைநீச ராவதுமில்லைமாதர்
பந்தயமில்லைமாட்டாப் பதியுளரில்லையென்று
முந்தியபாலரில்லை மூத்திரக்குழந்தையில்லை
வந்துளசகங்களில்லை வருவதுமொன்றுமில்லை

19. சாதியுமில்லைவேத சாத்திரமில்லைநாளு
மோதியபுராணமில்லை யுத்தமரில்லையெங்கு
மாதியாமவனேயாகு மந்நிலையடைந்துளோருக்
காதியுமந்தமில்லை யம்முறையாவேனின்றே

20. சாங்கியமில்லையோகஞ் சார்மதமில்லைமிக்க
வோங்கியசைவமில்லை யுறுவதுமில்லையாகு
மேங்கியதுவிதமில்லை யெண்ணிலாவதுவுமில்லை
வாங்கியவழியுமில்லை வாதமுமில்லையில்லை

21. சாக்கிரமூன்றுமில்லை சார்மதமில்லையெங்கு
மாக்கியவறிவுமில்லை யகநிலைவில்லையாக்கு
மோக்கமுமில்லைமூன்று முதல்வனுமில்லைமுன்னுட்
பாக்கியுமில்லைபாராப் பதிநிலையொன்றுண்டாமே

22. மனந்தனைப்பிருத்தியெண்ணி மாற்றினேன்மாறமாட்டா
தினத்துடனென்னைத்தாக்கி யிழுத்ததுமென்னதுன்ப
மனத்துயரொன்றுமின்றி மகிழ்வதுமெந்நாளோ
கனத்துறவடைந்தவென்னைக் காட்டிடாய்ககனவம்மா

23. சூத்திராறியொண்ணாத சூத்திரவான்மாவைத்தா
னேத்திரத்தறியலாகு நித்தியசகசமுற்ற
பாத்தியரகத்தைநாடிப் பரமமேதானுமென்று
காத்திருந்துடற்குளாகக் கண்டவர்கதியுளோரே

24. காணுறும்பதார்த்தமெல்லாங் கண்ணெனக்கண்டுதள்ளி
வீணினைப்பதனைமாற்றி வேதநூற்கலையுணர்ந்து
மாணலாவலியலாத வம்பரமதனைநீத்து
நாணறுநற்போதத்தை நாடுதனமக்குநன்றே

25. நேற்றுநானிருந்தேனிந்த நிர்ப்பீஜசமாதிதன்னி
லாற்றுவனதனுக்கெட்டா வாத்துமமதற்கப்பாலே
நீற்றகமறுத்துத்தள்ளி நிருவிகற்பமுங்கடந்து
வேற்றுருவறுத்துநின்ற விண்ணதேயானேனின்றே

26. சிரவணநான்கேயென்று செப்புவர்சிறந்தமேலோர்
சிரவணம்வாக்கியார்த்தஞ் சிற்பரவேதாந்தந்தான்
சிரவணம்பதார்த்தமாகுஞ் சீரியசமாதியென்னுஞ்
சிரவணமென்பரீதே சிறப்புடனறிகமாதோ

27. சாக்கிரங்கடந்துநின்ற சகசமேசகசமென்று
லாக்கிடுமதுவுமல்ல வத்துவிதத்தைநேரே
சாக்கியாயறியுமிச்சை சார்ந்தவர்சகசரல்ல
பாக்கியமிருந்தாலன்றோ பழகுவர்பரமநிட்டை

28. சோதியுங்கடந்துநின்ற சோதியேநாமென்றுன
வாதியாஞ்சமாதிதள்ளி யாகுவரவரேயென்று
காதையிலிருக்குமத்தைக் கழறுவர்ககனவாண
ரேதினுமறியொணாத தென்பர்களியலதாமே

29. சகத்தோற்றமில்லாஞானஞ் சார்வதேயாரும்பூமி
யிகத்தோற்றமென்றனக்கு மெப்போதுமில்லாதாகு
மகத்தோற்றமருளுவாயோ மாதவாமகிழ்தலின்றிச்
சகத்தோற்றந்தோற்றுஞானஞ் சத்துவாபத்திதானே

30. சொப்பனசகத்தையுண்மை சொற்றவர்மூடரென்றே
செப்புவனானுமின்றிச் சேதனனானேயென்று
யிப்புவியில்லையென்று மெண்ணியவதிகாரிக்கே
மிப்புவியில்லையாகு மென்றதுமறைகுவேனே

31. ஆத்துமசுகத்தினாலு மதுவதுவதுவேயாகச்
சோத்திரச்சுவையேமிக்கச் சுகமெனவெண்ணுமூட
னேத்திரமெனக்குநீயே நின்மலமாக்கியுன்னைப்
பாத்திரப்படுத்திநின்ற பரமதைப்பார்க்கவேண்டும்

32. பல்வளமிக்குந்தேவ ரத்தினிற்சனித்தும்பாக
மில்வளஞ்செல்வம்பூமி யின்னமுமனைவிமக்க
ளில்லறமிருக்கவைத்து மென்னையிவ்வளவுக்காக்கு
மல்லனேயின்னுமிந்த மாற்சுகமளிப்பதானே

33. பாசமேயோடிநாளும் பரம்பரசொரூபமாக
வேசையர்மனம்போலாக்கி விட்டனையென்னைமிக்க
நாசமுள்ளதுவோவிந்த நற்சகமென்றுநம்பி
மோசமேபோனேனென்னை முன்னுளவாறுசெய்யே

34. ஆயிரந்தரஞ்சொன்னாலு மப்படியறியுமுன்னை
வாயினாற்கூறிக்கூறி வழியழிந்திட்டநாயே
னாயினேனேராக்கண்ட நற்குணமகற்றிநின்ற
தேயமேபெரியதென்னத் தெரிந்தவர்செப்புவாரே

35. மனவதிதேவசந்த்ர ராதியான்வருவதாலு
மினவுறுவையன்றேவ் விறுமிகப்பிடாரியாலு
நனவுறுமின்பதுன்ப நானெனவெனக்கேயென்ன
வினவிபேவருந்தலாதி தெய்விகம்விளம்புவாரே

36. தானலாதானதன்னைத் தானெனக்கருதமத்தற்
றுனெனத்தாக்குஞ்சீவ சகத்தினுலாகுந்தானுந்
தானநற்கரணத்துண்டாந் தன்மையுஞ்சன்னதென்னுந்
தீனமேயாதியான்மீகம்மெனத்தெளிகுவாரே

37. சத்துவசேடனீங்கிச் சகசமேயாகவென்று
வித்தலவிச்சைகூடா வெண்ணமுங்கூடாவெண்ணு
மத்தலங்கூடாவாகு மாத்துமசொரூபநாட்ட
மத்திபங்கூடாவத்தான் மகிழ்வதுங்கூடாவாமே

38. ஏகமாந்தன்மையுற்று மெங்குமாயாவதற்கு
மாகமாமறிவுநீங்கி யாரையுமணுவ யெண்ணிப்
பாகமாஞானமுற்று பதத்துடனிலத்தைப்பார்த்து
மூகமாயிருத்தருனே யுண்ணிலையிருத்தலென்பர்

39. ஆண்டவனுலகசிருட்டி யறிந்தவனெவைசெய்தாலு
மீண்டியசெயலேயில்லை யிலையெனவறிந்தேனின்று
மாண்டவரெதனைக்கண்டார் மண்ணதையறிந்தாரென்றுங்
காண்டவனுனென்னக் காண்பதுங்காணமாட்டான்

40. தோவினுற்பிண்டம்போலத் தோற்றிடு[illegible]மேயென்னை
யாலைபோலாட்டிவிட்டா யாரைநீவிடுவையுன்னை
யோலகொண்டடக்கலாமோ வுண்மையாஞானமுற்று
லாலமரப்பனுணை யடக்கலாமஃது தீர்வை

41. திரண்டிருண்டிருக்குங்கொங்கை திரமெனக்கண்டுமூழ்கி
வரண்டமேநெஞ்சமோடி வாடினுயகமேயுன்னை
யிரண்டறுஞானத்தாலே யீடேறப்படுத்திமிக்க
வரம்பெறுமான்மவாழ்வில் வழிப்படவழங்குவேனே

42. எத்தனைபுத்திதானு மியம்பினுமேறவில்லை
யத்தனைமூடனான வறிவிலேனுன்னையின்றே
யத்தனாரணையாலே யாக்கியேயடிமையாகச்
சுத்தமாமான்மந்தள்ளிச் சுதந்தரமாகுவேனே

43. பேர்பெறும்பெரியவின்பம் பேணியேகாணுதோர்க்கு
மார்தருமுலகவின்ப மதுநசைதீராதென்ற
னூர்தனிநிச்சயந்தா னுண்மையீதென்றுரைப்ப
ரார்தருகமலச்செல்வி யமர்ந்துறையகமார்தேவே

44. அன்றுகாண்டீபனுக்கு மாரணமருளிச்செய்த
நன்றதைநலமாய்க்காண நலமிலார்நவிலுவார்க
ளின்றதையறிந்தசேதி யியம்புவதென்னேவென்ற
னன்றறிகண்ணன்சொற்ற நல்வழிநலமிதம்மா

45. இகத்துள்வெண்ணமெல்லா மெண்ணியேயெண்ணலாலே
யகத்துளஞானமுற்று மோடியவதனுலின்னு
மகத்துறுமான்மசித்தி யடைவதற்காகவேண்டிச்
சகத்துளசாதனங்க ளனைத்தையுந்தவிரவேண்டும்

46. யாதினுமொன்றினுசை யிருந்திடுமாகின்யாது
மேதினுற்கண்டுமாற்றி யியனமசொரூபநாட்ட
மாதியாலறிவையாய்ந்து மத்துவிதத்தைநேர்ந்துஞ்
சோதியேயாகவேண்டுந் துணிவுடன்றெருடருவேனே

47. வஸ்திரமொன்றிருந்தால் வந்திடும்விவகாரங்க
ளஸ்திரமிருந்தாலாரை யாகினுமெய்யவெண்ணு
முத்திரையிருந்தாற்கர்வ முழங்கிடுமுயற்சிபோல
வித்தினமிருந்துமஃதை யிடேப்பினிலிருக்கவேண்டேன்

48. சகத்துளவிச்சையெல்லாஞ் சாக்தரையென்னசெய்யு
மிகத்துளபோகமெல்லா மீசனையிழுக்குமோசொல்
மகத்துவமுடையமாந்தர் மண்ணினிலிருக்கமாட்டார்
தகர்ப்பதுந்தனியேயன்றோ தற்பரானந்தமாமே.

49. சகுணரூபத்திலென்றன் சாரகம்பற்றவில்லை
தகுதியாயென்றனக்குஞ் சாற்றியதன்மைதன்னைப்
பகுதியின்பாரமாமோ பாண்டியநாடாவுன்ற
னகமுனிமுனிவராலு மறியொணுவகத்தீசாவே.

50. பலசன்மப்பழக்கத்தாலே பலபலவிதமாயுள்ளஞ்
சலனத்தையுண்டுபண்ணிச் சலிக்கின்றதானதாலே
யலமறுமடியேனுக்கு மங்நிலையகமேயாக்கி
மலமிலாவுன்னைப்போல மாற்றுவாய்மகத்தின்றேவே

51. மத்திமகுணங்களென்னை மாட்டுதேமாதவாவென்
னுத்தமகுணத்தையீந்து முன்னியேயறியவைத்துச்
சத்தியபரமான்மாவிற் சரிப்பதுகடனுமென்ற
னித்தியசொரூபமான் நின்மலநின்னைக்கண்டேன்

52. ஆளினலாக்குஞ்செங்க லதனையேபச்சைதீரக்
காளைவாயிட்டுநீற்றிக் காந்தினர்பின்னேதண்ணீ
ராளினுமசங்காபோல வறிவினையறிந்தபின்னர்க்
காளையாமாதர்செல்வங் கலந்திருந்தாலுமஃதே

53. சாதனமொன்றுமின்றிச் சாற்றியசகசநிட்டை
யீதலுமறமோவென்று மியம்பினரிருடிமார்க
ளாதலாலடியேனுக்கு மப்படித்தானமெல்லா
மீதலேகடனுமென்ற னியலதுமீவாயன்றே

54. எத்தனைமுயற்சிசெய்து மென்மனோவாதனாக
மத்தினாலன்றியாகா வென்றதுமறிந்தபின்னு
மித்திரமனைத்துமின்றி யீறுருவமைவுளோர்க்கு
மத்திரமருளிச்செய்ய வமைந்ததுமரியதன்றோ

55. நீயெனநானென்றாகு நிமலமில்பதத்தைநாளு
மாயெனவிட்டவர்க்கு மறிவுறுமரியசோதி
வாயினாலறியவொண்ணா வத்துவேவழக்கமாக
மாயிறுஞாலமித்தின் மகிழுவங்குருவாயூரே

56. சகத்துளமாந்தரெலாஞ் சகமயக்கத்துளாழ்ந்து
மிகப்பொலிகின்றாரென்றன் மீட்சியைமீட்டவெண்ணி
யகத்துறுமன்னேயென்றனாட்டமேயறிவேயுன்னை
யிகத்தினிலெண்ணிநேரே யெங்குமாயாகுவேனே

57. தாமதகுணமெக்காலந் தவிருமோகுருவாயூரி
னாமெதுமிருக்குமிந்த நாரணாநண்புமிக்கும்
பாமரவடியேனுக்கும் பாகமாயருளிச்செய்ய
வீமனுக்கிளையனுக்கு விரித்ததையருளல்வேண்டும்

58. உய்யவேகோ[illegible]கால முளமலைந்திட்டதந்தோ
பையவேமனத்தைவீட்டுப் பரம்பொருளடக்கிமிக்க
வையமும்வானுமில்லா வழக்கமேவழக்கமென்று
செய்யகங்கொண்டுநாளுஞ் சீக்கிரமடையலாமே

59. வேண்டியநூல்களெல்லாம்விரித்துரைத்தறிந்துமுன்
யாண்டிடலரிதேயப்பா வையனேயரனேயென்ற [னை
னாண்டவனீயேயென்னை யாக்கிடக்குருவாயூரி
னீண்டியபெருமைதன்னை யியம்புவதென்றனாலோ

60. ஆலின்கீழறநால்வர்க்கு மருளியபெருமை நன்னை
யோலையிற்படித்துமுன்னை யுளவறிந்துய்யமாட்டா
வேலையிற்கிடந்துழன்று வேலையையகற்றிமால
நீலநேரகத்துளாரை நிலைத்தகநிறுத்துவாயே

61. செப்பியசகத்துளோரின் சிறிதறுஞ்சித்திதானு
மப்பமாமதனில்யானு மதிசயமடையமாட்டே
னொப்பியவகத்துளூறு முயரமிர்தத்தின்றேவே
யப்படியிருந்தாலன்றோ வறியலாமறிவுதன்னை

62. சகவிவகாரமெல்லாஞ் சகசர்க்குச்சகசமாகு
மிகவதுவாகவெண்ணி மின்றளிர்ப்போத்நீக்கி
யகநினைவற்றயோக ராகுவரவர்க்குநீதி
யகமிதினில்லையாகு மென்பர்களறிவறிந்தோர்

63. பாவினம்படித்துப்பாவைப் பார்க்கிலாப்பாவியேற்கு
மாவினம்போதாதத்தா லாகுமோவாகிடாதோ
வாவலையாக்கிநித்த மாகுறுமறிவையீந்து
ஞேவையுமகற்றிநின்ற நுண்மையுமகற்றுவாயே

64. அப்பனேமணியேயென்ற ஞகமேயா மிக்கத்
தப்புறுமடியேன்செய்த தப்பிதமனைத்துநீக்கி
யிப்புவிநாட்டமன்று ளிலங்கியவீசற்காக்கிச்
செப்பியபடியேசெய்து சீக்கிரமருளல்வேண்டும்

65. தூலமூன்றுடனே தள்ளித் தூரமாந்துரியம்பார்க்க
வேலலையென்றுலென்ன வியம்புவனென்மனத்து
ளாவிலேயமருமையா வாசனேயடியேனுக்குங்
காலிலாமனத்தையீந்து கதியருளருளுவாயே

66. இரண்டிலாஞானமேற்க வெண்ணிலிரண்டேயாகு
முரண்படுமதையுநீத்து முத்தியினிச்சைதள்ளிச்
சரதமாஞ்சகசந்தானுஞ் சாந்தமுமகற்றியப்பா
லுரந்தழீயிருந்தபார்வை யூநிறுஞானமாமால்

67. வேண்டிலேன்விதனவார்த்தை வேதமுங்கடந்துநேதித்
தாண்டியினிலைமைபெற்ற வடியனேற்கணுவுமில்லா
வாண்டவனியானலு மடியானதனுவொன்றுங்
காண்டிடுங்ககனவீசா கற்பநாட்கடந்துகாணேன்

68. உள்மனம் பிராந்திகொண்டா லுயருவதுண்டுசெர்ப்பந்
முள்மனம்பிராந்தியற்று லுயருவதில்லைசர்ப்பந்
தள்ளுவதனைத்துந்தள்ளித் தனிநிலைகொண்டபோது
மெள்ளளவுலகத்தோற்ற மிருப்பதுமெத்தினலோ

69. எத்தனை நூல்கள்கற்று மியம்பியமுத்திகிட்டா
தெத்தனை தரமுங்கூடி யேகினுமனதடங்கா
தெத்தனை தலஞ்சென்றுலு மேகமாந்தன்மைகூடா
முத்தனையறியவேண்டின் முத்தனயிருக்கவேண்டும்

70. சொல்பவர்செயயமாட்டார் சொல்வதோர்காரியத்தை
யில்வழியறியாமாந்த ரியம்புவரினிமையென்றே
பல்வழிவேதஞ்சொல்லும் பரவழியெதுவென்றுய்ந்து
நில்நிலையதுவேயாகு நிருமலமனதேயின்றே

71. சித்திகள்பலதுஞ்சேர்ந்து சீரியஞானஞ்சேதித்
துத்தியில்லாமலாக்கி யுறவழித்ததனுவின்று
கத்தனுந்தன்மைவிட்டுக் கரியதுங்கழலவிட்டு
முத்தனயாகிவிட்டு முடிவிலாததுவும்விட்டேன்

72. பேச்சிலாகிலேயமிக்கப் பெரியவர்பெரிதேயென்பர்
வாச்சியமகற்றியுள்ளே வத்துவையறியவெண்ண
லாச்சரியந்தானீது மாகிடலறிதேயென்ற
னீச்சிலேபட்டதெல்லா நின்மலமாகுமன்றே

73. வனிதையராசைகூடா வந்திடுமுத்தமர்க்கும்
பனியுறுமத்திமற்கும் பாலனைக்குறித்தேயாகு
நனியுளநாடினர்க்கு நாட்டினர்க்காகவேண்டி
வனிதையைமணஞ்செய்தாக்கி வரிப்பதுமதமமாமே

74. ஒயிலழகுடையமாத ருட்கணேயகஞ்செலுத்தி
யயிலுடையம்மானென்ற ஞகமேயருமைமிக்கப்
பயிலிதுபழக்கமான பரஞ்சுடர்ப்பரமானந்த
வெயிலிதோவெயிலென்றென்றே வேற்றெணங்களைதருனே

75. மந்திரஞ்செபங்களோம மாற்றியமனதிற்றூனே
தந்திரந்தோன்றுமென்று தயவுளோர்சாற்றுநிற்ப
ருந்தனதிடையேநின்று மூழதையறுத்துநின்று
லந்தமாமாதியற்ற வறிவதுவாகுவாரே

76. சகிலேமறந்துநின்ற சத்துவர்தமக்குநீதி
யகமிலேயென்றுநானு மறிந்தனனனுபவத்தா
லிகபரமிரண்டுமெற்றி மேத்தியவறிவைத்தள்ளி
யுகமுடிநாளுமாளா வுள்ளமேயாகுவாரே

வேறு.

77. ஆதிமுதலின்றுவரை யகத்திருந்து
மனுபூதியடைவுகாட்டிக்
கோதிலதா நெறிகாட்டிக் கொண்டிருந்துங்
குதித்தோடிப் போனதென்ன

நீதியிதோ வென்றழுதே நின்றபடி
நிற்காதோ நிருவிகற்பம்
பாதிவழி பாதையிலே பாதகனு
மடியேனைப் படுத்துவாயோ

வேறு.

78. வீணைகப்புத்தகத்தி லுள்ளதெல்லாம்
விளம்புகின்றாரீதென்னே வியப்புமேலா
மீனுகாவியற்பரம ரகசியத்தை
யெப்படியோ வாய்மொழியா லியம்புகின்றார்
காணார்கள்கண்டாலுங் கண்டதில்லை
காதாரக்கேட்டாலுங் கேட்டதில்லை
நாணுதநாணமற்று நாதரெல்லா நாற்காட்டி
னவிலுவது நலமாமன்றே

79. ஞானிக்கும்பிராரத்தங்க ணவில்வதுஞாயமன்று
மேனெனிலவர்தனக மிழுப்பதுமில்லையத்தா
லானியுமில்லையானு லடைவபோ லுலகத்தோர்க்குப்
பானியமிருப்பதாலே பகரலுங்குற்றமில்லை

80. தன்விவகாரமெல்லாந் தானியற்றுதலேமேலா
மன்விவகாரமெல்லா மன்னனேயியற்றல்வேண்டு
மென்விவகாரமற்று மிருப்பதேயென்றனக்குங்
கன்மனங்காணுவிந்தக் காரியங்கணித்ததாமே

81. காலத்திற்கேற்றவாறு கோலமுஞ்செய்யவேண்டும்
பாலர்களிடத்திற்பாலர் பண்டிதரிடத்திலஃதே
நாலினோர் பூமியுற்ற நல்லவரிடத்திலுலே
யாலின்கீழமர்ந்தபத்த ரவரிடமவரேயாகும்

82. நாளெலாஞ்சாத்திரத்திற் கழிந்தனநாரணுநின்
ளுளிலேநாட்கழிக்க நமனுண்டோநவிலுவாய்நீ
யாளெலாமஃதேயாறு லாரடையடைவதென்ரு
மாளுவமனமுமாண்டு மதிப்பதுகடனுமன்றே

83. இல்லறத்தொடர்பறுத்தோர் தம்முடனில்லறத்தோர்
நல்லறமியற்றவேண்டி நாளினுநவிலக்கூடா
வல்லதுவிவகாரத்தி லதிகமாமகமுங்கூடா
வல்லலென்றறிந்ததந்த வகமதுங்கருமமம்மா

84. ஆருடன்பேசினுலு மமிர்தம்போ லிருக்கவேண்டும்
வேருடன்பேசலாகா விரித்ததையுரைக்கலாகா
காருடன்கலத்தல்கண்டு கதிபெறவிலகவேண்டு
மூருடன்பழகலாகா வுணர்வதுஞ்சாதகர்க்கே

85. நம்மனமெஃதோவஃதே நாட்டுளசரங்களெல்லா
மம்மனமிருப்பதாலே யகண்டமாஞானமென்ப
ரெம்மனமொன்றிலாது மிருப்பதுநாமென்றெண்ணி
யம்மனவிசாரமுள்ளி யாவதேயான்மஞானம்

86. பிரபஞ்சமதிற்பிறந்து பிரட்டியதுன்பமெல்லா
மரன்செயலாலேயோடி யழிந்ததுமதிசயந்தா
னுரமுடனுலகத்துள்ள வொவ்வொருவரையுமிந்தத்
தரமுடனிருந்தமாயை தானிலையென்பனுனே

87. மனமுதற்பதினுன்கான மன்னுமிந்திரியங்களாலு
மினபுலிதுட்டசீவ ரிவர்களாலாகுந்துன்ப
மனதுடன் றனதாயெண்ணி மகிழ்விலாத்துக்கமாதி
யனகனேயாதிபௌதீ கம்மெனவறைகுவாரே

88. இருந்துமென்வர்தனைக்கு மென்செயலாலேயென்ற
னருந்திட்டலொட்டாமாயை யவித்தையென்றறைவரத்தை
யுருந்தினவரணியாக்கி யுத்தமக்குருவாய்வந்து
திருத்துதல்செய்வாயென்ற னிருத்தனேநிமலரேறே

89. சேகரசந்திரன்றன் சேர்வுறுஞ்செல்வமிக்க
வாகனேயடியேனுக்கு மருட்குருவாகிவந்து
மாகமாநிலையையாக்கி யத்துவிதத்தைநேரா
யேகமேயானென்றெண்ணு மெண்ணமுமிறியமாதோ

90. சுதிஞற்றன்பமெல்லாஞ் சுருக்கமாயடக்கமின்றி
வாதுசெய்யகமேயாகி வழியறநிற்குநின்றே
யோதியவுபநிஷத்து முறைசெயற்கரியநின்னை
யாதினுமறியலாமோ யாதவதிலகமன்னே

91. யாதினுமாளாவுள்ள மியாதிலேமாளுமையா
வாதுசெய்யகமேயாகி வழியறிந்தடங்கிநிற்கும்
காதியுங்கண்டகாதை கண்டதேகாணநின்ற
சோதியுமல்லையப்பாற் சுகநிலையாகுமன்றே

92. ஞானமாதியகோறு நற்குணநவிலுகின்றேன்
பானமாஞானம்வைரா கத்துடன்பலமுநண்ணு
மானவைஸ்வரியங்கீர்த்தி மன்னுஸ்ரீயாறுமாகு
மானவரிதையேமிக்க மகிழுவரறிஞர்மாதோ

93. வாதனைமனதைவிட்டு வழிவரவில்லையென்ன
வேதனையீதுமீசா வெண்குணமெனக்குத்தாஞ
மாதவவிவணேவந்து வரமளித்தருளல்வேண்டுஞ்
சீதராநின்னையன்றி நினைகிலேன்சொப்பனத்தும்

94. என்றனைமயலிலாழ்த்தி யீசனினருளையீர்த்துப்
பன்றியின்மனம்போலாக்கிப் பாமிகும்பத்தியில்லா
வன்றுறவடைந்தநாயேன் வாழ்க்கையின்வழக்கமற்ற
வென்றனதறிவேயென்னை யிறக்கடித்தாதனன்றோ

95. உலகமேசெல்வமாக வுற்றிடவென்னபாவ
மலகினேதுயரமுற்று மாகுவதெந்தநாளோ
மலையினினிருந்துகீழே மதியறவீழ்வார்போலச்
சலனமேயுற்றநாளுஞ் சன்மத்தினடைகுவேனோ

96. மாதரின்மயக்கந்தன்னின் மாழ்கியேமதியிலாதே
னாதரவாறுமில்லை யன்றிருந்தின்றுகாரு
மேதமில்லடியேனுக்கு மின்னருளத்தினாலே
யாதவவுன்னைக்கண்டு யாதினும்பற்றனாவேன்

97. எங்குமாய்நின்றவுன்னை யெப்படியடைவதென்னு
மூங்கியமயக்கமென்றன் மூயலகந்தன்னிலில்லை
பங்குறுஞ்சீவனான பாதகவடிமைநாயே
னுங்களின்பாததூளி யொருவனுளொருவனன்றோ

98. சூத்திரநீயேயாகுஞ் சொரூபமானானே பாகு
மாத்திரமாகுமென்று மதித்ததுமதித்ததாமோ
நேத்திரமானவென்ற னிண்ணயநிருவிகற்பப்
பாத்திரவெள்ளிநீரிற் பாங்குறும்பரமநாதா

99. பல்லியாய்ப்பிறந்துநானே பழகியேயிருக்குமென்னை
யில்லிலேயறியாமற்று னிருக்குறுமந்தவேளை
யில்லறிஞானமேவ விழந்ததோரியல்பினாலே
யில்லுறுஞானமுற்ற விசைநிலையாகினேனே

100. வேதநூற்கற்றுத்தேர்ந்தும் விண்ணவர்பெருமநின்னை
யோதிலார்தமக்குநீயே யுரைத்திலைபோலுமுண்மை
யேதுறவியற்குணத்தோ டென்றனக்காகவேகி
யாதினுமிருக்குமிக்க வங்ஙனமருளுவாயே

ஓம் தத் ஸத்.

